# முத்தா

( சிறுகதைகள் )

எஸ். ரமேஷ்

இந்நூல் தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித் துறையின் தமிழ் வளர்ச்சிக்கான நூல் வெளியிட நிதியுதவித் திட்டத்தில் உதவி பெற்று வெளியிடப் பெறுகிறது.

Shakespeare's Desk



*Details About the Book.....*

| | | | |
|---|---|---|---|
| 1. | Title of the Book | : | *Muththa* — A Collection of short stories |
| 2. | Name of the Author | : | **S. Ramesh** |
| 3. | Content of the Book | : | Fiction –A Collection of Short stories |
| 4. | Nature of the Book | : | Original work by the author |
| 5. | Language of the Book | : | Tamil |
| 6. | Copyright | : | L-55256 New Delhi |
| 7. | Author's Address | : | **S. Ramesh**<br>**No. 33, South Car Street,**<br>**SRIVILLIPUTTUR – Pin. 626 125.**<br>**VIRUDHUNAGAR DISTRICT**<br>**TAMIL NADU — INDIA**<br>**Cell : 87542 24076 / 94873 67414**<br>**E-mail : rameshzillion@hotmail.com** |
| 8. | Year of publication | : | 2014 |
| 9. | Copyright holder | : | S. Ramesh |
| 10. | Page Designed at | : | Selvan Graphics , Srivilliputtur |
| 11. | Printed at | : | Atchaya Ads & Prints, Sivakasi. |
| 12. | Price | : | **₹. 80/-** |

**This book has been published under the aid and aegis of funds granted for publishing books for Tamil language development by the Tamil Development Department of Tamil Nadu Government.**

# சமர்ப்பணம்...

1. என்றென்றும் ஆதரவு தரும் நண்பர் ***சிவகாசி வார முரசு*** ஆசிரியர் ராஜா சொர்ண சேகர் அவர்களுக்கும்,

2. ***மஞ்சரி*** மாத இதழ் ஆசிரியர் குரு மனோகரவேல் அவர்களுக்கும்,

3. ***தி ஹிந்து*** - நாளிதழின் சிறப்பு நிருபர் தீபா இராமகிருஷ்ணன் அவர்களுக்கும்

4. நண்பர்கள் கோதையூர் மணியன், இராஜபாளையம் இரா. கதைப்பித்தன், கவிதா தாசன், மனம் மகிழ ராஜாராம், ப. அடைக்கலம், எஸ்.எஸ். ஆர்.லிங்கம், குறிஞ்சிச் செல்வர் கொ. மா. கோதண்டம், மற்றும் தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம், ஸ்ரீவில்லிபுத்தூர் கிளையின் நண்பர்களுக்கும்,

5. கேரள எழுத்தாளர் பால் சக்கரியா அவர்களுக்கும்,

6. தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித்துறையின் அதிகாரிகள், அலுவலர்கள் அனைவருக்கும்,

7. ஸ்ரீவில்லிபுத்தூர் பென்னிங்டன் நூலகக்குழு அலுவலர்கள் அனைவருக்கும்,

8. இந்நூலைப் பிழை திருத்தம் செய்து ஆலோசனை தந்த மொழிபெயர்ப்பாளர் சா. தேவதாஸ் அவர்களுக்கும்,

9. திரைப்பட இயக்குனர் மகேந்திரன் அவர்களுக்கும்,

10. இந்நூல் வெளிவர அனைத்து உதவிகளும் செய்த நண்பர்கள் அனைவருக்கும்...

11. கணினியில் தட்டச்சு செய்து கொடுத்த நண்பர் க. செல்வநாதனுக்கும்...

# பனையும் இலவமும் நிமிர்ந்து நிற்கும் மேற்குத் தொடர்ச்சி மலை

வழக்குரைஞரான எஸ். ரமேஷ் மொழிபெயர்ப்பிலும் சிறுகதைகளிலும் ஆர்வங்கொண்டுள்ளார். சாஸரின் “கேன்டர்பரி கதைகள் “ என்னும் நூலினைச் சமீபத்தில் வெளியிட்டுள்ளார். அடுத்தபடியாக, “முத்தா" என்னும் இச்சிறுகதைத் தொகுப்பை வழங்குகிறார்.

மேற்குத் தொடர்ச்சி மலையின் பக்கமாயுள்ள திருவில்லிபுத்தூரைச் சேர்ந்த இவர் திருவில்லிபுத்தூர், வன்னியம்பட்டி, நாச்சியார்பட்டி, அச்சம்தவிர்த்தான் என அதிகம் பதிவாகாத நிலப்பகுதியினையும் வாழ்க்கைப் போக்கினையும் பதிவு செய்கிறார். இவருக்கு முன் இப்பகுதியை இலக்கியமாக்கித் தந்தவர் வீர. வேலுச்சாமி. நல்ல வடிவ நேர்த்தியுடன், வறுமை நிறைந்த வாழ்வின் சிண்டு சிடுக்குகளை, நுட்பமாகத் தனது “நிறங்கள் “ (அன்னம், சிவகங்கை) சிறுகதைத் தொகுப்பில் தந்திருக்கிறார்.

ஆறு சிறுகதைகள் கொண்ட இத்தொகுப்பிலுள்ள கதைகள் வளமான நடையில் பரிகாசத் தொனியில் விவரிக்கப்பட்டுள்ளன. எந்த நிகழ்வுடனும் போக்குடனும் பாத்திரத்துடனும் நெருக்கமாகி உணர்வு நெகிழ்ந்து, மிகை உணர்ச்சிப்பாங்கானதாக்கி விடாமல் விலகி நின்று சொல்கிறார். முனியாண்டி என்னும் தெய்வம் காட்டுப்பனையில் தோன்றி மிரட்டுவதிலிருந்து பனை முறிந்து விழும்போது அத்தெய்வமும் இல்லாது போவது நிழலில் குளுமையும் ஆறுதலும் அளித்து வந்த இலவமரம் (இப்பகுதி வழக்கு சார்ந்து ஒலவமரம் எனக் குறிப்பிடப்படுகிறது ) மின் கம்பத்தை ஒட்டி உயர்ந்திருப்பது பிரச்சனை என்பதால் வெட்டப்படுகிறது.

“ வீழ்ந்த ஒலவமரம். பூமியெங்கும் பரந்து கிடந்தது. மல்லாந்து கிடந்து வானம் பார்த்தது. ஒரு தடவை அதைப் பார்வையால் விழுங்கிய பச்சையப்பன், அதன் அருகில் போய் தன் வலது காலை உயர்த்தி அதன் பருத்த மார்பு ஒன்றின் மேல் வைத்து மிதித்தான். அது சிலிர்த்தது. தன்னைப் பெண்டாள வந்தவனை ஏறிட்டுப் பார்த்தது. பச்சையப்பன் கீழுதட்டில் ஒரு கேலிச்சிரிப்புடன், மீண்டும் அதன் தொடைகளைத் தன் காலால் அழுத்தினான். அது மீண்டும் சிலிர்த்தது.

தன் பௌருஷத்தால் அதை வெற்றி கொண்டோம் என்ற மமதையில், தன் பூரண ஆண்மையின் வெளிப்பாடாக, பச்சையப்பன் ஒலவ மரத்தை பார்த்து, ஒரு சிரிப்பு சிரித்தான். சம்போகம் முடிந்த திருப்தியில் ஒலவமரம் சோர்ந்தது. தளர்ந்து போய்த்தரையில் கிடந்தது ".

பிரும்மாண்டமாய் வளர்ந்த பசியமரம் வீழ்த்தப்படுவது பெண்ணை ஆள்வதான விவரிப்பாய் வளர்கிறது. இயற்கையை மனிதன் அடக்கியாள்வது ஆண் பெண்ணை அடக்கியாள்வதாகிறது. செடி கொடிகளை மரமட்டைகளை வனங்களை அழிப்பது ஆணின் அதிகார விளையாட்டாகிறது. வல்லுறவில் பெண்ணை நாசப்படுத்துவதும் பசிய மரத்தை வெட்டுவதும் இணையாக்கப்படுகிறது.

உருளைக்கிழங்கு சிப்ஸ் வாங்கித்தருமாறு அடம் பண்ணும் பிள்ளையிடம், அது உடலுக்குத் தீங்கானது, அதில் சேர்ந்துள்ள இரசாயனங்கள் வேண்டாம் என்று கூறியும் மகனைத் திருப்திப்படுத்த முடியவில்லை. ஒரு பொட்டலத்தை வாங்கிக் கொடுத்து விடுகிறார்.

"திண்ணையில் குழந்தை ஸ்ரீகாந்த் சாப்பிட்டு விட்டுக் கீழே போட்ட உருளைக்கிழங்கு சிப்ஸ் பொட்டலத்தின் வண்ணக் காகிதம் கிழிபட்டுக் கிடந்தது. கீழே குனிந்து அதை எடுத்துப் பார்த்தேன். நீல, சிவப்பு, வெள்ளை வர்ணங்களில் கோட், சூட் தொப்பி அணிந்த அந்த அமெரிக்க வெள்ளைக்காரன், சிப்ஸ் பொட்டலத்தைச் சிபாரிசு செய்யும் வண்ணம் இடது கையை உயர்த்திக் காட்டிக் கொண்டிருந்தான். அவனது சட்டையில் நீல நிற நட்சத்திரங்கள் மின்னிக் கொண்டிருந்தன. எனக்கென்னவோ அவனது உருவத்தை ரசிக்கப் பிடிக்கவில்லை".

என்றெழுதும் கதை சொல்லிக்குப் பாட்டி அலமேலு செய்து தந்த உள்ளூர் நொறுக்குத் தீனிகளில் காராமணி ஞாபகத்துக்கு வருகிறது.

"அலமேலு அம்மாள் காராமணி சாப்பிடும் விதமே தனி அழகுதான். அதே போல் நானும் சாப்பிட்டுப் பார்த்திருக்கிறேன். காராமணியை ஒரு பூவரச இலை தொன்னையில் எடுத்துக் கொண்டு, பிறகு கையில் சிறிது எடுத்துக் கொண்டு வாயில் போட்டதும், கண்களை மூடிக் கொள்ள வேண்டும். காராமணியின் உப்பும் உறைப்பும் நாக்கைத் துளைக்கும். மெதுவாக அரைக்க, அரைக்க அதன் பயறு மணிகளின் ருசி கொஞ்சம் கொஞ்சமாய்ப் புலன்களுக்கு உணர வரும்... "

அந்நிய நொறுக்குத்தீனி கேடானது என்று இங்கு பேசப்பட, முனியாண்டியை வணங்கும் தொழிலாளர்களிடையே ஏசுவின் உபதேசம் செல்லுபடியாகாதது “ராஜாராம் ஷெட் “இல் வெளிப்படுத்தப்படுகிறது.

“ஞாயிற்றுக்கிழமை ஓய்வு நாள் என்றும், அதைப் ‘பரிசுத்தமாய் ஆசரிப்பாயாக’ என்றும் கட்டளையிட்ட தேவன், அதற்கு ஒரே ஒரு விதிவிலக்கு ராஜாராம் ஷெட் என்றும் சொல்லியிருக்கிறார் “. தேவனின் உபதேசத்தை பீட்டர் சகாயராஜே பகடி பண்ணி உதாசீனம் செய்து விட, தேவன் மீண்டும் தேவாலயத்துக்கு வந்து விடுகிறார்.

ஒரு கிராமத்தில் வைதிகர்களெல்லாம் வெளியிடங்களுக்குக் கிளம்பிப் போய்விட , இருக்கின்ற ஒரேயொரு வீட்டுக்கும் அட்வான்ஸ் தர பரமுத் தேவர் வர இருக்கின்றார். இந்நிலையில் பராமரிப்பின்றி களையிழந்து காணப்படுகிறது பெருமாள் கோவில். “அங்கு சந்நிதி மட்டுமே இருந்தது. சாந்நித்யம் இல்லை". வெளியிடங்களில் குடியேறியவர்கள் சௌக்கியமாயிருக்க, பெருமாள் ஒரு சுகமும் இல்லாது இருக்கிறார்.

“…அத்திகுளம் விலக்குக்கு முன்பாக பரந்த, காய்ந்த கரிசல் பூமியில் மக்காச்சோளக்காடு எல்லையின்றி விரிந்து கிடந்தது. பின்புலத்தில் மேற்குத்தொடர்ச்சி மலைகளும், இளநீல நிறத்தில் வெளிறிய வானமும் தென்பட்டது. ஏனோ, அப்போது, அச்சம்தவிர்த்தான் பெருமாளின் உருவம் அங்கு எல்லா இடத்திலும் படர்ந்திருப்பது போல அவனுக்குத் தோன்றியது.”

நூலின் தலைப்புக் கதையான “முத்தா" ஒருவரது வாழ்க்கை வரலாறாக அமைந்துள்ளது. அரசு வேலை, இரண்டு தாரங்கள், பிள்ளைகள் - பேரப்பிள்ளைகள் என்று நிறை வாழ்வு வாழ்ந்து 88 வது வயதில் மாரடைப்பு வந்து இறந்து போகும் முத்தா, வயதான காலத்தில் போதுமான வருவாயின்றி, ஒரு பெண்ணுக்குத் திருமணம் செய்து வைக்க முடியாத வேதனையில் தனக்குள் ஆழ்ந்து போய் சோகமும் வேதனையும் வாட்ட, வாழ்ந்து வந்தது சொல்லப்படுகிறது. தகனத்திற்குப் பின் அவரது துணிமணிகளெல்லாம் வைகையில் மிதந்து செல்கின்றன.

“நதியின் சுழித்து ஓடிய நீரோட்டத்தில், ஏதோ ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் தன் நாடு, நகரத்தையெல்லாம் இழந்து விட்டு, தன் கிரீடத்துடன் தண்ணீரில் மல்லாந்து கொண்டு மிதந்தபடியே சென்றதைப் போல அவருக்குப் பிரமிப்புத் தட்டியது.

ஆக, ரமேஷின் கதைகளில் பதிவாகியுள்ள உலகை இப்படித் தொகுத்துரைக்கலாம். விவசாயியோ தொழிலாளியோ தனக்குத் தேவைப்படும் நிலையில் ஒரு முனியாண்டியையோ வேறு தெய்வத்தையோ தன் சூழலில் உருவாக்கிக் கொண்டு அதை வழிபட்டு வருகிறான். அவனுக்குப் பெருமாளும் தேவையில்லை, ஏசுவும் அவசியமில்லை. வளமான பண்பாடும், நாகரீகமும் காலங்காலமாக இங்கு இருந்து வர, நுகர்வு வெறியால் இங்கு நுழையும் கேடான பண்டங்கள் கூட பாரம்பரிய உணவுகளை இல்லாமலாக்கி விடுகின்றன. மரத்தை, வனத்தை அளிப்பது சுற்றுப்புறச் சூழலை நாசப்படுத்துவது மட்டுமின்றி, பெண்மையைச் சீர் கெடுக்கும் ஆணின் அதிகாரமாகவும் உணர்த்தப்படுகிறது.

பொதுவாகக் கதை சொல்லிகள், தம் அக உலகின் நெருக்கடிகள், அழுத்தங்கள், குழப்பங்கள், வேதனைகள், விபரீதங்களையே வெவ்வேறான எடுத்துரைப்பில் பிரதிகளாக்கித் தந்து கொண்டிருக்கும் கால கட்டம் இது. இந்நிலையில் தனி நபரின் அக உலகத்தைத் தொடாமல், புற உலகின் போக்குகளை மட்டுமே ஒரு பார்வையாளர் நிலையில் ரமேஷ் முன் வைக்கிறார் இது தனிச்சிறப்பானது.

பரிகாசம், எள்ளல், பகடியுடன் தெய்வத்திலிருந்து பிடிவாதம் பிடிக்கும் சிறுவன் வரை தன்னால் நகையாட முடிவதைச் சாதித்துக் காட்டியிருக்கிறார் ரமேஷ். மேற்குத் தொடர்ச்சி மலையின் பின்புலத்தில் அடிக்கும் வெயிலும், தகிக்கும் அனலும் ஒரு புறமிருக்க, வழிபாடின்றி பெருமாள் தவிக்க, ஏசு ஏமாற்றம் கொள்ள, முனியாண்டி மட்டும் வேடிக்கை-கேளிக்கையுடன் மும்முரமாயிருக்கின்றார் மறுபுறத்தில்.

சில இடங்களில் கதைகள் நீண்டு கொண்டே போகின்றன. வாழ்க்கைச் சரிதங்களை அப்படியே தருவதில் புதிதாய் சொல்ல ஏதுமில்லாது போய்விடலாம். மற்றபடி பதிவு செய்யவும் பகடி செய்யவும் நிறையவே தமிழில் இருக்கின்றன. ரமேஷிடம் நிறைய எதிர்பார்க்கலாம்.

**சா. தேவதாஸ்**

**இராஜபாளையம்.**

# முத்தா

----- எஸ். ரமேஷ்

( சிறுகதைகள் )